# புதுமைப் பாக்கள்



விலை அணா ௪.



ராய. சொக்கலிங்கன்.

# முன்னுரை



அருமைத் தமிழ்ச் சகோதரர்களே!

வேலூர்ச் சிறையில் நான் பாடிய பாக்களில் "தாலாட்டும் கும்மியும்" என்று ஒரு நூலும் "காந்தி பதினெண்பா" என ஒரு நூலும் முன்னர் அச்சிட்டு வெளிப்படுத்தினேன். அதில் ஒரு பகுதியை இங்கு வெளியிடுகின்றேன். இந்நூலுக்குப் பெயர் "புதுமைப் பாக்கள்." புதுக் கருத்துக்கள் புகுத்திப் பாடிய பாக்களின் தொகுதியாகலின் அப் பெயர் இட்டேன். எனது இப்புதுமைப் பாக்களில் பத்து வகை அடங்கி யிருக்கின்றன. பழந் தமிழுக்குப் புதுமைப் பாக்கள் இன்றியமையாத் தேவை என்பது என் கருத்து. தமிழ்த் தாய்க்கு அவளுடைய ஏராளமான ஆபரணங்களோடு இந்த என்னால் சமைக்கப் பட்ட ஒரு சிறிய அணியையும் ஒரு இடத்தில் போடுகின்றேன். எனது அணியில் அழுத்திய மணிக்கு ஒளிவிடும் ஆற்றல் எவ்வளவு உண்டோ அந்த அளவுக்கு அது விளங்கித் தோன்றட்டும்!

பவ மாசி உசஅ.
சென்னை.



ராய. சொக்கலிங்கன்.

# உள்ளுறை.


| தொடர் எண். | பெயர். | பாவகை. | பக்க எண். |
|---|---|---|---|
| க | எந்நாட் கண்ணி | கண்ணி | க |
| உ | பேரிகை | கண்ணி | ௬ |
| ௩ | விடுதலை | கண்ணி | க0 |
| ௪ | இந்தியா | கண்ணி | கஉ |
| ௫ | தமிழ் மொழி | கண்ணி | க௩ |
| ௬ | காதல் மறுமணம் | கண்ணிப்பா | உஉ |
| ௭ | கிளி விடுதூது | கண்ணிப்பா | உ௬ |
| ௮ | கோவில் திறவு | விருத்தம் | உ௯ |
| ௯ | சாதி | அகவல் | ௩௩ |
| க0 | வீர நாடு | சிந்து | ௪௩ |
| கக | செய்யுள் முதற்குறிப்பு | | ௪௯ |

# 1. எந்நாட் கண்ணி

பாயிரம்

அறுசீர் விருத்தம்

சாலிவா கனசகமாண் டாயிரத்தெண்
ணூற்றின்மேற் சார்ந்து நின்ற
நாலினோ டொருபத்து நான்கொன்றுங்
கீரசவில் ஆடி நான்காம்
எலுநாள் எழில்ராய வேலூர்ச்சீர்ச்
சிறையதனில் எந்நாட் கண்ணி
கோலினன் காரைநகர் ராயசொக்க
லிங்கனுயர் கொள்கை மேவ.

வாய்த்த பெருங்காந்தி மன்னும் அறமுலகில்
பூத்து மணம்வீசிப் பொலியுநாள் எந்நாளோ? ௧

வீயாப் புகழோடு மேனாள் உலகாண்ட
தாயார் விலங்கு தகருநாள் எந்நாளோ? ௨

சரிநிகராய் உலகதனில் தண்ணளிசேர் நம்மன்னை
அரியணையில் முடிதாங்கி அமருநாள் எந்நாளோ? ௩

மண்குளிர எங்கள் மாதா அரசிருக்கக்
கண்குளிரக் கண்டு களிக்குநாள் எந்நாளோ? ௪

நாட்டை மறந்துசுய நன்மை தனைநாடிக்
காட்டிக் கொடுப்போர் கண்பெறுநாள் எந்நாளோ? ௫

தகவறியா அதிகாரி சாரும் அடிவருடும்
பகதூர்கள் நல்லறிவு படருநாள் எந்நாளோ? ௬

புனிதம் அறியாது புல்லடிமை போதுமென்பார்
மனிதர் எனஉலகில் வாழுநாள் எந்நாளோ? ௭

ஒன்றறியா அதிகாரி உதைத்தகால் முத்தமிடும்
நன்றறியா மூடரெலாம் நலமுணர்நாள் எந்நாளோ? ௮

ஆழி கிடக்குமிந்த அளவிலாப் பேருலகில்
ஏழை அடிமையெலாம் இலவாநாள் எந்நாளோ? ௯

வீறோ டரசாளும் வேற்றார்முன் இந்தியர்கள்
ஏறுபோல் பீடுநடை ஏற்குநாள் எந்நாளோ? ௧௦

கோடி படைத்தோரும் குடிப்பதற்குக் கூழின்றி
ஓடி யலைவரெனும் ஒன்றறுநாள் எந்நாளோ? ௧௧

புலைமைத் தொழில்செயினும் புன்பிறப்பே காரணமாத்
தலைமை பெறவிழைவோர் சாய்ந்தொழிநாள் எந்நாளோ? ௧௨

சாதியால் தீண்டாதார் என்னவொரு சாராரை
வாதிக்கும் மெய்யறியார் மதிபெறுநாள் எந்நாளோ ௧௩

பழைய வழக்கமெனும் பகுத்தறிவில் செய்கைகளைக்
குழியில் புதைத்தழுந்தக் கோதறுநாள் எந்நாளோ ௧௪

பித்துக்கொண் டொப்புயர்வில் பெண்மை தனைப்பழிப்போர்
செத்தஇடம் புல்முளைக்கச் செய்யுநாள் எந்நாளோ? ௧௫

காதல் புரியிருவர் கருத்தை இடைதடுக்கும்
சாதி சமயமெலாம் தகர்ந்திடுநாள் எந்நாளோ? ௧௬

குதலைச் சிறுமியரைக் கோதில் நலங்கெடுத்து
விதவைப் பெயர்தருவோர் வீழுநாள் எந்நாளோ? ௧௭

எனக்குத் தமிழ்வாரா தென்றுரைக்கும் புன்றமிழர்
இனித்த தமிழ்பேசி எழிலுறுநாள் எந்நாளோ? ௧௮

தூண்டும் அறியாமைத் தொடரான புன்மையெலாம்
மாண்டு மடிந்தழிந்து மண்ணுநாள் எந்நாளோ? ௧௯

உலகம் செழித்தோங்கி உயர்ந்த அறம்வளர்ந்து
கலைகள் நனிநிரம்பக் காணுநாள் எந்நாளோ? ௨௦

பூதான் அளப்பரிய புண்ணியத்தால் பெறுபாத
மாதா அரசெய்தி மகிழுநாள் எந்நாளோ? ௨௧

வசையின்றி வாழ்ந்திந்த வையகத்தில் எல்லோரும்
பசியாமல் உண்டுடுத்திப் படருநாள் எந்நாளோ? ௨௨

அலகிலாப் பெரும்பொருளும் அதிகாரம் போன்றனவும்
நிலையிலா என்றுணர்ந்து நேர்பெறுநாள் எந்நாளோ? ௨௩

கொத்தடிமை நீங்கியெங்கள் கோகிலப்பொன் மாதரார்
ஒத்தநலம் பெற்றோங்கி ஒளிருநாள் எந்நாளோ? ௨௪

எக்குலத்தில் எந்நாட்டில் எம்மதத்தில் இருந்தாலும்
மிக்கசெயல் பூண்டாரை மேவிடுநாள் எந்நாளோ? ௨௫

தேமாங் கனிபோலச் செப்புமொழி கண்டுநனி
ஏமாந்த சோணகிரி ஏறுநாள் எந்நாளோ? ௨௬

பல்லோரும் ஏத்தும் பாந்தஇந்தப் பூவுலகில்
எல்லோரும் இன்புற் றிருக்குநாள் எந்நாளோ? ௨௭

பிறந்தார் இறந்திடுதல் பெரிதும் உறுதியெனும்
சிறந்த அறமுணர்ந்து சீர்பெறுநாள் எந்நாளோ? ௨௮

வைத்த பெருநிதியம் வாழ்வாசு மண்ணிழந்து
செத்த முடிமன்னர் திறமுணர்நாள் எந்நாளோ? ௨௯

முடிசூடி அரசாளும் மெய்ம்புள்ள மன்னவரும்
படிமீது மிடிகூரும் பண்புணர்நாள் எந்நாளோ? ௩௦

பிறர்க்குரியார் நலந்துய்க்கப் பேணலிரு சாரார்க்கும்
மறக்கரிய இன்னலெனும் மாண்பறிநாள் எந்நாளோ? ௩௧

பிறப்பில் உயர்விழிவு பேசும் அறிவோடு
சிறப்பில் சிறுமனிதர் திருந்துநாள் எந்நாளோ? ௩௨

ஆணுயர்வு பெண்ணிழிவென் றறையும் அறியாமைக்
கோணல் மனிதருயர் குணம்பெறுநாள் எந்நாளோ? ௩௩

இருவர் இணைந்துபெறும் இல்வாழ்வுக் கறிகுறியா
ஒருவர் பெறுந்தாலி ஒழியுநாள் எந்நாளோ? ௩௪

சின்னஞ் சிறுவயதில் திருமணங்கள் செய்தில்லின்
மன்னும் அறங்கெடுக்கும் மாசொழிநாள் எந்நாளோ? ௩௫

இத்தரையில் எல்லா எழிலார் இளையாரும்
புத்தகமும் கையுமாப் பொலியுநாள் எந்நாளோ? ௩௬

தேவர் குறள்போன்ற சீர்மையற நூலொன்று
யாவர் செயவல்லார் என்றுணர்நாள் எந்நாளோ? ௩௭

வேந்தன் இளங்கோ விரித்ததமிழ்ச் சிலம்பினிமை
மாந்தி இறுமாந்து மகிழுநாள் எந்நாளோ? ௩௮

உம்பர் அமிழ்தினிதென் றுரைத்திடுவார் உண்மையினில்
கம்பர் தமிழறியார் கண்டறிநாள் எந்நாளோ? ௩௯

கடமை தனைப்புரியும் கருணை செறி அறிஞர்
உடைமை தனைப்பெற்றே உயருநாள் எந்நாளோ? ௪0

கண்டார் மருளக் கையிற் றடிகொண்டு
தொண்டர் தலையடித்தல் தொலையுநாள் எந்நாளோ? ௪௧

மூக்கடைக்கத் தொண்டர் மூச்சடைக்க நாற்றமுடைச்
சாக்கடையை ஊற்றுபுன்மை சாகுநாள் எந்நாளோ? ௪௨

நாட்டை மறந்துசுய நன்மை தனைநாடிக்
காட்டிக் கொடுப்போர் கண்பெறுநாள் எந்நாளோ? ௪௩

நிலையில் பொருள்கொண்டு நீதிதவிர் ஆறதனால்
கொலைநேர் வினைபுரிவோர் குப்புறுநாள் எந்நாளோ? ௪௪

நுண்மணல்போல் வெண்டிரைபோல் நுவலரிய பல்லாசர்
மண்ணதனில் மாண்டொழிந்த வகையறிநாள் எந்நாளோ?

செல்லு மிடமெலாம் சிறப்பன்றி வேறுதாக்
கல்வி பெருகியே கசடறுநாள் எந்நாளோ? ௪௬

மாதடிமை யென்றுரைக்கும் மாண்பும் அறிவுமிலாப்
பேதை மனிசரெலாம் பித்தொழிநாள் எந்நாளோ? ௪௭

நலத்துடனே இல்வாழ்வு நடத்துமிரு காதலரும்
இலக்கியங்கள் பயின்றுகனி இன்புறுநாள் எந்நாளோ?

அரிய உலகனைத்தும் அறமார் அழகுசெறி
பெரிய இனியதமிழ் பிறங்குநாள் எந்நாளோ? ௪௯

நல்ல பொருளனைத்தும் நாடிக் கடனுக்கொள்
ஒல்காப் பெருமனிதர் ஓங்குநாள் எந்நாளோ? ௫௦



# 2. பேரிகை

பாடிய தேதி :—ஆங்கிரச ஆவணி ௪-௨

திசைகுலுங்க அலைபுலம்பச்
சேர்ந்துகொட்டு பேரிகை
செகங்கலங்க மலையெழும்பச்
சேர்ந்துகொட்டு பேரிகை ௧

ஏழையில்லை கோழையில்லை
என்றுகொட்டு பேரிகை
இந்தியா எழுந்துவிட்ட
தென்றுகொட்டு பேரிகை ௨

அடிமைவாழ்வு படியிலில்லை
என்றுகொட்டு பேரிகை
மடிமையில்லை மிடிமையில்லை
என்றுகொட்டு பேரிகை ௩

எங்கள்நாட்டை நாங்கள்ஆள்வோம்
என்றுகொட்டு பேரிகை
பங்கவாழ்வு வாழமாட்டோம்
என்றுகொட்டு பேரிகை ௪

விடுதலைக்கு உயிருமீவோம்
என்றுகொட்டு பேரிகை
விடுதலையைப் பெற்றேதீர்வோம்
என்றுகொட்டு பேரிகை ௫

என்றைக்கேனும் இறப்பதுறுதி
என்றுகொட்டு பேரிகை
வென்றிகொள்வோம் மெய்ம்மைமெய்ம்மை
என்றுகொட்டு பேரிகை ௬

அச்சமென்ப தணுவுமில்லை
என்றுகொட்டு பேரிகை
இச்செகத்தில் எவர்க்குமஞ்சோம்
என்றுகொட்டு பேரிகை ௭

கொடுமையான சட்டமஞ்சோம்
என்றுகொட்டு பேரிகை
தடியுமஞ்சோம் அடியுமஞ்சோம்
என்றுகொட்டு பேரிகை ௮

எந்திரபீ ரங்கியஞ்சோம்
என்றுகொட்டு பேரிகை
தந்திரப்பேச் சினிப்பலிக்கா
தென்றுகொட்டு பேரிகை ௯

உரிமைதடுக்கும் எதையுமழிப்போம்
என்றுகொட்டு பேரிகை
உரிமையில்லா வாழ்வுவேண்டோம்
என்றுகொட்டு பேரிகை ௧0

காந்திவந்தான் மாந்தருய்ய
என்றுகொட்டு பேரிகை
தீர்ந்தபுன்மை யானயாவும்
என்றுகொட்டு பேரிகை ௧௧

உயர்வுதாழ்வு பிறப்பிலில்லை
என்றுகொட்டு பேரிகை
அயர்தல்செய்யோம் அன்னைபணியில்
என்றுகொட்டு பேரிகை கஉ

புலையர்என்று பிறப்பிலில்லை
என்றுகொட்டு பேரிகை
புலமைகொண்டோர் புலையராவர்
என்றுகொட்டு பேரிகை கங

பெண்ணையிழிப்போர் பேதைமாக்கள்
என்றுகொட்டு பேரிகை
பெண்ணும்ஆணும் ஒக்குமறிவில்
என்றுகொட்டு பேரிகை கச

அறந்தழைக்க அவனிவாழ
அதிர்ந்துகொட்டு பேரிகை
திறஞ்செழிக்கத் தேசம்வாழத்
தேர்ந்துகொட்டு பேரிகை கரு

பட்டம்பதவி கெட்டமாயை
என்றுகொட்டு பேரிகை
விட்டுத்தொலைப்பீர் வீண்பட்டத்தை
என்றுகொட்டு பேரிகை கசு

கத்தர்பெருக மற்றதொழிய
என்றுகொட்டு பேரிகை
பித்தர்வேறு நாட்டைவிழைவோர்
என்றுகொட்டு பேரிகை கஎ

தொழில்வளரச் சோர்வகல
　　　என்றுகொட்டு பேரிகை
இழிவுதொலைய யாவும்உயர
　　　என்றுகொட்டு பேரிகை　　　௧௨

துன்பம்செய்வோர் பொருளைவாங்கோம்
　　　என்றுகொட்டு பேரிகை
இன்பம்பெருக இன்பம்பெருக
　　　என்றுகொட்டு பேரிகை　　　௧௬

கொட்டுகொட்டு கொட்டிமுழக்கு
　　　கொட்டுகொட்டு பேரிகை
கொட்டிமுழக்கு கொட்டிமுழக்கு
　　　கொட்டுகொட்டு பேரிகை　　　௨௦



# 3. விடுதலை

பாடிய தேதி :—ஆங்கீரச ஆவணி ௧௧-௨

எங்கள்நாட்டை நாங்கள் ஆள
எவர்தடுக்க வல்லவர் !—அவர்
தங்கள்நாட்டை நாங்கள்ஆளத்
தந்துவாழ வல்லரோ ? ௧

எங்கள்நாட்டின் விடுதலைக்கு
இன்னுயிரும் ஈகுவோம் !—தாய்
பங்கம்நீங்க உயிர்கொடுத்தல்
பாக்கியமென் றேகொள்வோம் ! ௨

பிறந்தபொழுதே இறத்தல்திண்ணம்
என்றபீடு சாலுயர்—பேர்
அறத்தைஉலகுக் கறைந்தநாங்கள்
அஞ்சுவோமோ உயிர்விட ! ௩

எங்கள்உரிமை தன்னைப்பிடுங்க
எவர்க்கும்உரிமை இல்லையால் !—இனி
மங்கியடிமை வாழ்வுவாழ மாட்டோம் !
மாட்டோம் ! நிச்சயம் ! ௪

இந்தியாவை ஆளுமுரிமை
இந்தியர்க்கே உரியது !—இதை
எந்தஉலகில் யாவர்மறுத்தே
இயம்பவல்லார் ! சொல்லுவீர் ! ௫

எங்கள்நாட்டை ஏழையாக்கும்
    ஏதிலாரின் பொருள்கொளீர் !—என
எங்களவரை நாங்கள் தடுக்கும்
    இதுவும்குற்றம் ஆகுமோ ? ௬

வன்சிறைக்கு அஞ்சுகாலம்
    மாண்டுமண்ணிற் புதைந்தது !—நல்
அன்னைவிலங்கை அறுத்தற்கஞ்சி
    ஆவிகாப்போர் மனிதரோ ? ௭

தாய்விலங்கு தாங்கிநிற்கத்
    தனயர்விலங்கு தாங்கலில்—வந்
தேயுங்குற்றம் என்னே! யீதை
    அறியமாட்டார் இழிந்தவர் ! ௮

உணர்ச்சிதன்னைச் சிறைசெயற்கு
    உலகில்வல்லார் உள்ளரோ ?—பெரும்
கணக்கில்வலிமை படைத்தவர்க்கும்
    கருதலாகு மோஅது ! ௯

எந்திரமீ ரங்கியெங்கள்
    உணர்ச்சிதன்னை என்செயும் ?—உடல்
வெந்துபோயின் வேற்றுடலில்
    வீறுகொள்வ துறுதியால். ௧௦



# 4 இந்தியா

பாடிய தேதி :—ஆங்கிரச ஆவணி கக-உ.

தொன்றுதொட்டுப் பூமிவாழத் தூய்மைமிக்க அறமெலாம்
மன்றஉணர்த்தி வளம்பெருக்கி வாழ்ந்ததெங்கள் இந்தியா க

அன்றுபுத்தன் தன்னைநல்கி அறம்வளர்த்தது இந்தியா
இன்றுகாந்தி தன்னைப்பெற்றே எழில்வளர்ப்பது இந்தியா உ

வள்ளுவனென் றொப்புயர்வில் மாட்சிமிக்க புலவனால்
கொள்ளைநீதி குவலயத்துக் குரைத்ததெங்கள் இந்தியா ௩

உயிரினும் சிறந்துயர்வ தொழுக்கமென்றே உலகெலாம்
செயிரறத் திகழுமாறு செப்பியதெம் இந்தியா ௪

நாகரிகம் இன்னதென்று நளிர்கடல்சூழ் நாடெலாம்
வாகுடனே அறியவன்று வகுத்தளித்தது இந்தியா ௫

காதல்வீரம் கற்புமேன்மை கருணையாதி யாவையும்
ஆதிநாள் வகுத்துரைத்த தருமைகொண்ட இந்தியா ௬

வானமீன் அளக்கவல்ல மாண்புமிக்க அறிஞரை
ஏனைநா டளிக்குமுன்னர் ஈன்றதெங்கள் இந்தியா எ

விலைமதிப்பில் பண்டைநாள் மேதினியோர் மெச்சிட
எலிமயிரால் ஆடைசெய்த தீடில்எங்கள் இந்தியா அ

கலைவளர்த்தே யறம்பெருக்கிக் கருணைவாழ்வு கண்டெலாம்
நிலையிலாமை யென்றறிந்து நேர்மை கொண்டது இந்தியா கூ

உலகந்தன்னை இயக்குவிக்கும் உண்மையான ஒருபொருள்
அலகில்ஆற்றல் வல்லததுவென் றறிந்ததெங்கள் இந்தியா கO

# 5 தமிழ்மொழி

பாடிய தேதி :—ஆங்கீரச ஆவணி உரு-உ.

இனிமைநீர்மை தண்மைமேன்மை
ஏய்ந்ததெங்கள் தமிழ்மொழி
தனிமைஇளமை பழமைபுதுமை
சார்ந்ததெங்கள் தமிழ்மொழி க

கன்னற்சாறும் கனியுமமுதும்
காய்ச்சுபாலும் கண்டுடன்
இன்னபொருள்கள் யாவும்புளிக்க
இனிக்குமெங்கள் தமிழ்மொழி உ

ஆயிரம்பல் லாண்டுமுன்னர்
ஆக்கிவைத்த அருமைசால்
மாயிரும்பல் காப்பியங்கள்
வாய்ந்ததெங்கள் தமிழ்மொழி ரு

மண்ணிலெங்கும் நிகரிலாத
மாட்சிகொண்ட போற
எண்ணில்நீதி நூல்கள்கொண்ட
தெங்கள்கன்னித் தமிழ்மொழி ச

பண்டைநாளில் சங்கமேறிப்
பாரிலீடி லாமலே
அண்டர்போற்ற வீறுகொண்ட
தருமையான தமிழ்மொழி ரு

புலமைதன்னில் ஆண்களோடு
போட்டிகொண்டு பெண்களும்
தலைமைகொண்ட பாக்கள்யாக்கத்
தழைத்ததெங்கள் தமிழ்மொழி ௬

அகமும்புறமும் உணர்த்துபாக்கள்
அனந்தம்பண்டை நாளினில்
மகளிர்மைந்தர் பாடவாய்த்து
வளர்ந்ததெங்கள் தமிழ்மொழி ௭

இத்தரைக்குப் பழையதமிழர்
இயலைநன்கு விளக்கிடும்
பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும்
படைத்ததெங்கள் தமிழ்மொழி ௮

கரைபொருந்தக் கலையமைத்த
கவினுடைத்தொல் காப்பியப்
பெருமைமிக்க இலக்கணத்தைப்
பெற்றதெங்கள் தமிழ்மொழி ௯

மருவுகளவும் கற்பும்திணையும்
பாபுமற்றும் யாவுமார்
பொருளதிகாரம்படைத்த
தொப்பிலெங்கள் பொன்மொழி ௧௦

ஒலநீதி தனையுலகுக்
கிடித்துரைக்கும் இணையிலா
நாலடியார் உடையதெங்கள்
நலந்திகழ்தீந் தமிழ்மொழி ௧௧

நலமனைத்தும் வடித்துரைத்த
நன்றுதீது நன்கறி
தலமதிக்கும் வள்ளுவனைத்
தந்ததெங்கள் தமிழ்மொழி கஉ

பெரிதும்வளரும் இற்றையுலகும்
பேணிக்கொள்ள அற்றைநாள்
அரியநீதி யுரைத்தகுறளே
அடைந்ததெங்கள் தமிழ்மொழி கங

அன்புமறத்தை அறுக்குமென்ற
அரியகாந்தி கொள்கையை
முன்புபொய்யில் வள்ளுவன்வாய்
மொழிந்ததெங்கள் தமிழ்மொழி கச

அருளையறத்தை அன்றுமின்றும்
அவனியென்றும் கொண்டிடப்
பெருகநல்கும் வள்ளுவனைப்
பெற்றதெங்கள் தமிழ்மொழி கரு

ஒக்கும்பிறப்பில் உயிர்களெல்லாம்
என்றஉண்மை உரைத்திடும்
தக்கபுலவன் தன்னைப்பெற்ற
தெங்களினிய தமிழ்மொழி கசு

அந்தணரென் போறவோர்
என்றவுண்மை அறத்தினை
முந்தையொப்பில் புலவன்வாயில்
மொழிந்ததெங்கள் தமிழ்மொழி கஎ

நாடுபுகழும் ராமகதையை
　　நல்லவிருத்தப் பாவினால்
ஈடிலாமல் பாடினோனை
　　ஈன்றதெங்கள் தமிழ்மொழி　　கஅ

நனியிப்பூவில் இராமகாதை
　　நவின்றபுலவர் அனைவர்க்கும்
தனிமுடியாம் கம்பன்தன்னைத்
　　தந்ததெங்கள் தமிழ்மொழி　　கசு

செவியில்தேனை விடுத்ததொப்பத்
　　திருத்திராமன் கதையினைக்
கவிபுனைந்த கவியையீன்ற
　　தெங்கள்கனிந்த தமிழ்மொழி　　உ௦

மூலநூலைத் தோற்கடித்த
　　மொய்ம்புமிக்க கம்பனை
ஞாலம்போற்ற நல்கியதெம்
　　நவையில்நல்ல தமிழ்மொழி　　உக

புதுமைகொண்ட பொருளெல்லாம்
　　புகுத்திவைத்த பொருவிலாச்
சதுரக்கம்பன் தன்னைப்பெற்றுத்
　　தழைத்ததெங்கள் தமிழ்மொழி　　உஉ

சாதிசிறிய நெறியென்றன்று
　　சாற்றுமுயர்ந்த கம்பனின்
நீதியுடைய தெங்களொப்பில்
　　நேர்மைகொண்ட தமிழ்மொழி　　உங

சொல்லிற்றேனும் அமுதுங்கொண்டு
தொடுத்தளித்த சீர்த்திகொள்
மல்லல்மிக்க சிலம்புபெற்று
வாழ்வதெங்கள் தமிழ்மொழி உச

கண்ணகிகோ வலனரிய
கதைவிரித்த சிலம்பெனும்
ஒண்மைச்சுவையை நல்குகோவை
உடையதெங்கள் தமிழ்மொழி உரு

குழலும்யாழும் குழைத்தெடுத்துக்
கோவலனற் கதையினை
அழகுத்தமிழில் அருளுவேந்தை
அளித்ததெங்கள் தமிழ்மொழி உசு

துறவுமணி மேகலையாள்
கொண்டபெரிய தூய்மைசேர்
அறமுரைத்த சாத்தனுரை
அளித்ததெங்கள் தமிழ்மொழி உஎ

புத்தனருள் மெய்யறமிப்
புவிமுழுதும் பொங்கிட
மெத்துமணி மேகலைநூல்
மேயதெம் தமிழ்மொழி உஅ

மேவுமின்பங் கூறுநூலில்
மேதினியோர் காமுறும்
சீவகசிந் தாமணியைச்
செய்ததெங்கள் தமிழ்மொழி உகூ

திறமுணர்ந்து பெண்ணினத்தின்
சீர்த்திகாட்டிச் சீருடை
அறமுரைத்த ஔவையாரை
அளித்ததெங்கள் தமிழ்மொழி ௩௦

தேவமாலக் காதலித்துத்
திறமும்வீர முஞ்செறி
பாவைசெய்த பாவையாளைப்
பயந்ததெங்கள் தமிழ்மொழி ௩௧

ஆத்திருடும் ஆனடியை
அடைந்துநின்றே அற்புதப்
பூத்தொடுத்த புனிதவதியைப்
பெற்றதெங்கள் தமிழ்மொழி ௩௨

அன்புகடவுள் என்றுணர்ந்த
அருமைபெருமை யாவுமார்
என்புருக்கும் வாசகத்தை
ஈன்றதெங்கள் தமிழ்மொழி ௩௩

கல்லும்மானும் மண்ணும்மாவும்
கசிந்துகசிந்து கனிந்திடச்
சொல்லுமணி வாசகனைப்
பெற்றதெங்கள் தொன்மொழி ௩௪

தேவைப்பாடும் அரியநாவல்
சீர்த்திமிக்க நற்றிருக்
கோவைபாடும் கோவையீன்று
குளிர்வதெங்கள் தமிழ்மொழி ௩௫

மூவான்று வாரங்கொண்டு
　　மொழிதொடுத்துச் செஞ்சடைத்
தேவுக்கிட்ட ஆரங்கொண்டு
　　திகழ்வதெங்கள் தமிழ்மொழி　　௩௬

இறைசிவனென் றுளத்திருத்தி
　　இசைத்தமிழி லெண்ணிலாக்
குறைவில்சீர்த்தி மூவர்பாடல்
　　கொண்டதெங்கள் தமிழ்மொழி　　௩௭

மாலின்பாதத் தாழ்பெரியோர்
　　வாயிலாக மாண்புடை
நாலுகொண்ட ஆயிரப்பா
　　நவின்றதெங்கள் தமிழ்மொழி　　௩௮

பெரியமாலே கடவுளென்று
　　பேசுகின்ற பெருமைசால்
அரியகீர்த்தி ஆழ்வார்பாடல்
　　அணிந்ததெங்கள் தமிழ்மொழி　　௩௯

யார்க்குநாங்கள் குடியல்லோம்
　　என்றநாவுக் கரையன்பாக்
கீர்த்திசூடி மிளிர்வதெங்கள்
　　கேடில்வீரத் தமிழ்மொழி　　௪௦

தெய்வமணக்கச் செய்யுள்செய்த
　　சேக்கிழானை ஈன்றுசீர்
எய்துதொண்டர் புராணங்கொண்ட
　　தெங்கள்தண்மைத் தமிழ்மொழி　　௪௧

சீர்திருத்தம் பலபுகுத்திச்
சிறக்கவன்று சேக்கிழான்
பார்மதிக்கச் செய்தகாதை
படைத்ததெங்கள் தமிழ்மொழி சஉ

ஆயுமறிவி னுரையுருக்கும்
அரியகொள்கைப் பாவுரை
தாயுமானப் பெருமையோனைத்
தந்ததெங்கள் தமிழ்மொழி சங

உளமிருக்கும் அறிவேதெய்வம்
என்றுணர்ந்த உண்மைசேர்
களங்கமற்ற தாயுமானாற்
கண்டதெங்கள் தமிழ்மொழி சச

பாவுதமிழில் பாலும்தேனும்
பாகுங்கைக்கப் பாவுரை
இராமலிங்கன் தன்னைப்பெற்ற
தெங்களினிய தமிழ்மொழி சரு

உருகியுருகி ஓதுவார்தம்
உள்ளங்கரைக்கும் ஒண்மைசேர்
திருவருட்பா உடையதெங்கள்
சிறந்தவரிய தமிழ்மொழி சசா

மதியினர்கள் போற்றியேற்கும்
மாட்சிகொண்ட மனோன்மணிப்
புதியஅணியும் பெற்றுநன்கு
பொலிவதெங்கள் தமிழ்மொழி சஎ

வீரங்காதல் இனிமைபுதுமை
　　மேவநாட்டைப் போற்றிடும்
பாரதிபாப் பெற்றுயர்வு
　　படைத்ததெங்கள் தமிழ்மொழி　　௪௮

நல்லதமிழில் பாக்கள்கோத்த
　　நாடுமதிக்கும் பாவுக்கோர்
செல்வனென்னும் பாரதியை
　　ஈன்றதெங்கள் தேமொழி　　௪௯

கரும்பும்தேனும் கண்டும்பாலும்
　　கனியுமென்னப் புலமையோர்
விரும்புபாக்கள் எண்ணில்கொண்டு
　　விளங்குமெங்கள் தமிழ்மொழி　　௫௦



# 6. காதல் மறுமணம்

பாடிய தேதி :—ஆங்கீரச புரட்டாதி க-உ

## வாராமைக்கு இரங்கல்

மணம் பேசி முடிவு செய்த காதலன்
வாராமைக்கு வருந்தி, காதலி
தோழியிடம் கூறுவது.

என்னகந் தொட்டஅவன்—சகியே!
ஏனோவந் தானிலையே ;
சொன்ன படிபுரிவார்—மோகனன்
தொண்டரென் பதுபொய்யோ!
"கன்னலே தெள்ளமுதே!—உனையே
காதல் மணம்புணர்வேன் ;
உன்துயர் தீர்த்திடுவேன்—கைம்மையை
உடைத்திடுவே" னென்றிட்டான். க

காந்திமேல் ஆணைவைத்து—சகியே!
கருத்துரு கிமொழிந்தான்.
"ஏந்தும் எழிலிளமை—உடைய
இன்கனி கள்அழுதே
வீழ்ந்திடல் நான்சகியேன்—கனியே!
விதிக்கும் விதியாவேன் ;
காந்தையர் பேரொளியே!—கருத்திற்
கவலை யொழித்தி"டென்றான். உ

வாரா தொழியானே—சகியே !
வந்ததெத் தீத்துயரோ ?
போர இடும்பையையும்—புரியப்
பின்வாங்கு வாரோ ; பெற்ற
தீராத காதலுடைத்—திருவைச்
சித்ர வதைபுரிவோர்.
ஆரடி செய்திசொல்வார்—சகியே !
ஆற்றிட என்றனக்கே. ௬

பச்சிளங் கன்னியரைச்—சகியே !
பருவம் உறுமுன்னமே
இச்செகத் தின்பமின்றிப்—புவியில்
ஏங்கிப் புரண்டழச்செய்
நச்சை நிகர்கொடிய—சகியே !
நல்லறம் நன்றறியா
அச்சமி லாமனிசர்—எதுவும்
ஆற்றத் துணிவாரடி ! ௭

தூய கதருடுத்தி—அடி ! யென்
சுந்தரன் பண்டொருநாள்,
மேய பொழிலிடையே—அமுதை
வீசும் முழுநிலவில்,
நாயகன் மேலாணை—உரைத்தென்
நற்றிருக் கையடித்து,
நாயகி நீயென்றிட்டான்—சகியே !
நாள்பல சென்றதடீ ! ௮

இன்னும் வாக்காணேன்—சகியே!
என்செய்வ தென்றறியேன்;
அன்னமும் செல்லவில்லை;—அடி!யென்
ஆவி துடிக்குதடி!
மன்னவன் வாரானே,—சகியே!
வாழ்வெற்குத் தாரானே?
என்னசெய் வேனடிநான்—சகியே!
யார்துணை என்றனக்கே! ௬

அமிழ்தும் புளிக்குதடி!—சகியே!
அதனிலும் மிக்கசுவைத்
தமிழும் கசக்குதடி!—சகியே!
சந்திரன் கொல்லுகிறான்!
கமழு தென்றலெனும்—மலையக்
காற்றும் வெதுப்புதடி!
சமையும் பொருள்களெலாம்—சகியே!
தையலை வாட்டுதற்கோ! ௭

ஓதத் திரைக்கடல்தான்—சகியே!
உறங்கித் தொலைக்காதோ!
மாதுயர் நல்குமிந்த—சகியே!
மதியும் தொலையாதோ!
தீதை எனக்களிக்க—அடியே!
தென்றலேன் வந்ததடி!
காதலென் பதுநல்ல—உயிரைக்
கவரும் எமனேடீ! ௮

செந்தமிழ்த் தீங்குழலும்—சகியே !
செவிக்கு விடமெனக்கே !
அந்தி வருமாலே—அடி!யென்
ஆவி குடிக்குதடி !
அந்தக் குயிலோசை—அகத்தை
ஆட்டி அலேக்குதடி !
எந்த விதஞ்சகிப்பேன் !—சகியே !
என்னுயிர் வாராக்கால். கூ

மாழைக் கருவிழிகள்—உறங்கும்
வகையை யானறியேன் ;
ஏழை படுந்துயரை—அடி!யென்
இன்னுயிர்க் கியாருரைப்பார் ?
தோழி உரையாயோ !—சொலியென்
சுந்தரற் கூட்டாயோ !
வாழிநீ பல்லூழி—அடி!யென்
மருந்தை அழைத்திடுவாய். கo



# 7. கிளிவிடு தூது

---

பாடிய தேதி :—ஆங்கீரச புரட்டாசி க-உ

காதலி காதலனிடம் கிளியைத்
தூது அனுப்புவது.

பல்லவி

சொல்லி அழையாயோ!—கிளியே!
சொல்லிநீ கூவாயோ!

அனுபல்லவி

சிந்தை புகுந்தஎன் கண்—மணிக்குச்
சேயிழை யாள்நிலை செப்பிக் கலந்திடச் (சொல்லி)

கட்டழகி உனைநான்—கடல் மண்
காற்றுவின் உள்ளவரை—கனியே
விட்டுப் பிரிவதில்லை—எனவே
விண்டிட்ட பண்டை மொழியை மனங்கொளச் (சொ)

எடுக்கும் பிறவிதொறும்—இனியாய்
இணைபிரி யேனுனைநான்—எனவன்
நியம்பிய இன்னுரையை—எடுத்தே
ஏல மொழிந்திவண் எய்திக் கலந்திடச் (சொ)

நீலக் கடற்கரையில்—பாலே
நேரம் நிலவினிலே—அடியென்
சோலைக் குயிலேயுன்—கொடிய
துயர்களை வேனெனச் சொன்ன மொழியினைச் (சொ)

இளமையும் நலனுமையோ—வறிதே
இன்ப நுகர்ச்சியின்றி—அழுதே
கழிந்திடல் நன்றலப்புன்—கைம்மையைக்
கண்டதுண் டஞ்செய்வோம் என்றிட்ட வாய்மையைச் (சொ)

வழிகாட்டு வோம்நமர்க்கு—இதில்நீ
மனப்பயம் கொள்ளாதே—அழகே!
இழிவிதிற் சிறிதுமில்லை—எனவன்
நியம்பிய இன்னுரை தன்னை எடுத்துநீ (சொ)

அன்றென் அகங்கவர்ந்தே—இற்றைநாள்
அன்னியர் போலிருத்தல்—சிறிதும்
நன்றலச் சொன்னபடி—கனியை
நண்ணி நலங்குடித் துய்ந்திட வாவென்று (சொ)

அந்தி நிலவொளியில்—அலைக்கை
அடித்து நனிமுழக்கி—அலறிக்
கொந்தளிக் குங்கடலின்—கரையில்
கூறிய வாறிங்கு கூடிட வாவென்று (சொ)

சோலை யிடையொருநாள்—மலர்க்கை
தொட்டதன் மீதடித்து—தோகையே!
ஞாலம் நடுங்கமணம்—புரிவேன்
நாயகி நீஇனி என்றிட்ட நல்லுரை (சொ)

என்னலம் நாடியல—மகளிர்
இனம்நனி வாழ்ந்திடவே—எனஉள்
மன்னிய காதலற்கென்—மறுவில்
வாய்மை யுணர்த்தி மணம்புணர் வாயென்று (சொ)

காந்தியின் மெய்யடியார்—கழறும்
கட்டுரை கடத்தலில்லை—எனயான்
மாந்துமென் காதலனும்—களிற்றை
வந்துன் கரும்பினை உண்டு மகிழென்று (சொ)



# 8. கோவில் திறவு

---

பாடிய தேதி :—ஆங்கிரச புரட்டாதி உஉ-உ

எண்சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

எங்குநிறை ஒருபொருளைச் சிலையிற் காணும்
இயல்புடையீர் நீரென்னில், இறையின் அன்பீர்!
பங்கமிலா இறைபடைப்பு,இப் பார னைத்தும்
பல்குயிரொன் றறிவீரேல், பரமன் தன்னைப்
பொங்குபெரும் காதலொடு போற்றப் போதும்
புதல்வர்தமைப் பிறப்பதனால் புலையர் என்று
தங்குமிறை கோவிலிலே புகவி டாது
தடுத்திடுதல் அறமாமோ! தகவு தானோ!! க

'அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோய் கொண்ட
ஆவுரித்துத் தின்றுழலும் புலையர் எனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பர் ஆகில்"
கடவுளவர் காணென்ன, நாவின் வேந்தப்
புங்கவனன் றருளுமொழி மறந்தீர் கொல்லோ!
பொய்தீரன் பொடுபணியப் போவார்க் கெல்லாம்
திங்களிளங் குழவிவளர் செய்ய வேணிச்
சிவனுறையும் திருக்கோவில் திறப்பீர்! சீர்!! உ

அன்புசிவம் என்றுரைத்தார் அறிஞர் எல்லாம்;
அதுமெய்யே எனநீவிர் அறிவீர் ஆகில்,
என்பணிந்து கூத்தாடும் இறைவன் அன்பீர்!
இறையுருவம் கண்டுதொழ விரும்பு வோரைப்
புன்பிறப்பே காரணமாத் தடுத்தி டாதீர்!
புலையரெனப் பிறப்பிலுண்டோ? புனிதன் வாழும்
மன்பெரிய திருக்கோவில் வணக்கம் எல்லா
மக்களுக்கும் பொதுவாக வைப்பீர்! வாழ்வீர்!! ௩

கொண்டல்வணன் அடியவரைப் பழிப்போர் தாமே
குவலயத்துப் புலையரெனக் குறித்துப் பண்டு
தொண்டரடிப் பொடியாழ்வார் வாய்ம லர்ந்து
சொன்னவறம் தனைமறந்தீர்! தூய மாலைத்
தெண்டனிடச் செலுமடியார்த் தடுத்தி டாதீர்!
தீயபுலைப் பெயர்தாங்கீர்! திருமால் பாதத்
தொண்டுடையீர்! தடையின்றி அடியார்க் கெல்லாம்
தூயதிருக் கோயில்களைத் திறந்து தாரீர்! ௪

வம்பவிழ்தா மரையாளை மார்பில் வைத்த
வனப்புடைய உலகமெலாம் காக்க வல்ல
செம்பவள வாய்த்திருமால் அடியீர்! இந்தச்
செகமுழுதும் காக்குமொரு மாலே, நீங்கள்
நம்புபெரும் கோவிலிலே உள்ளான் என்னில்,
நாடாமல், பொருளின்றி அவன்ப யந்த
தம்புதல்வர் தமைத்தடுத்தல் தகுதி யாமோ?
தாழ்க்காது தடையெடுப்பீர்! சால்பு வேண்டின். ௫

கிள்ளைமொழிச் செய்யவாய் முல்லை மூரல்
கெண்டைவிழித் திங்கள்நுதற் கேடி லாத
வள்ளியெனும் குறக்கொடியைக் காதல் கொண்டு
மணம்புணர்ந்தான் மால்மருகன் ஆனூர் தந்த
புள்ளிமயில் வேலனெனப் புராணஞ் சொல்வீர்!
பொற்கொடிவள் ளியைவைத்துப் பூசை செய்வீர்!
எள்ளியவள் தனைவளர்த்தோர் அவளைக் காண
ஏலாமல் தடைபுரிதல் இனிதோ சொல்லீர்! ௬

மோதுபெரும் வடிவேலைக் கையில் தாங்கி
முருகனவன் நிற்பதற்குப் பொருள்நீர் காணீர்!
தீதுடையார் தமையொறுக்க அன்றோ அந்தத்
திருக்கோலம்! தீண்டாதார் என்றே அன்னன்
காதலியின் சுற்றத்தார் முதலி னோரைக்
கருதிநீர் வீணாக ஆல யத்துள்
போதாற்குத் தடைபுரியும் தன்மை தன்னைப்
பொறுத்திடான்; விடுமிதனைப் புகழும் உண்டாம். ௭

உலகமெலாம் பெற்றெடுத்தாள் அன்னை யென்றே
உரைத்திடுவீர்! அவள்பயந்த மக்கட் குள்ளே
சிலரவள்வாழ் கோவிலுக்குள் சென்று தாயைத்
தெரிசித்தல் கூடாதென் றுரைப்பீர்! ஐயோ!
நலமொன்றும் அறியீர்கொல் நல்கு மாதா,
நடத்துவளோ வேறுபட மக்கள் தம்மை?
தலமேற்கா துமதுமொழி! தேவி கோவில்
தமைத்திறப்பீர்! எல்லோர்க்கும் தடையி லாமல் அ

நந்தனை ரைத்தொழுவீர்! பாஞ்ழ் வாரை
நல்லரங்க நாதரெடுத் தாண்டார் என்று
சொந்தமாச் சொல்லிடுவீர்! அன்பு மேனித்
தூயபெரும் கண்ணப்பர் ஆதி யோரை
வந்திப்பீர்! அன்னபெரி யோர்க ளெல்லாம்
வந்துதித்த மாபினரைத் தீண்டார் என்பீர்!
இந்தமொழி ஏலாது! கோயில் எல்லாம்
இனித்திறக்கத் தாழ்க்காதீர்! இறைவன் அன்பீர் ௯

பிறப்பதனல் தீண்டாதார் என்று கொண்டு
பெரியதிருக் கோவிலெலாம் புகவி டாது
மறுத்திடுதல் அறமன்று! தீண்டல் ஆகா
மாண்பில்செயல் வாய்ந்தோர்எக் குலத்தார் எனும்
புறக்கணிப்பீர்! மிக்கசெயல் பூண்டோர் யாண்டும்
போதரினும் புகவிடுமின்! பொருளில் செய்கை
அறக்களைமின்! பிறப்பதனல் தீண்டார் என்னல்
அறிவுலகம் ஏருதால்! அறிவை ஆள்வீர். ௰



# 9. சாதி

பாடிய தேதி:—ஆங்கீரச ஐப்பசி ௫-௨

நிலைமண்டில ஆசிரியப்பா

உலகினர் உயர ஒப்புயர் வில்லா
நலநிறை அறம்பொருள் நல்லின் பம்மெனும்
முப்பால் வகுத்து முழுதையும் அளந்த
செப்பருஞ் சீர்த்தித் திருவள் ளுவனெனும்
௫ வையகம் போற்றும் மாண்பமை நல்லோன்!
பொய்யில் புலவன்! செய்தவன்! சீலன்!
கன்னலும் தேனும் காய்ச்சிய பாலும்
மன்னுதெள் ளமுதும் வளர்தரு கனியும்
இன்னிசைக் குழலோ டியாழின தொலியும்
௧௦ அன்னதீஞ் சுவையுடை அனைத்தையும் வென்ற
சுந்தரம் இளமை தொன்மை நிறைந்த
செந்தமிழ் அன்னை திருவிழி இரண்டுள்,
அருள்பொழி ஒருவழி அனையவன்! அன்னான்
தருதிருக் குறளெனும் தமிழ்மறை தன்னுள்
௧௫ பிறப்பினில் ஒக்கும் பிறங்கும் உயிரெலாம்
சிறப்பினில் ஒவ்வா செய்தொழி லாலென
வழுத்தினன். இப்பெரும் மாநிலம் முழுதும்
தொழத்தகு புகழுடைத் தொன்மூ தாட்டி
இனிமையும் நீர்மையும் இயன்ற தமிழ்த்தாய்
௨௦ தனதுமற் றொருகண் தானென நின்றோன்;

மாநிலம் போற்றும் வள்ளல் இராமன்,
நாநிறை கீர்த்தி நாமவேல் மன்னன்,
தயரதன் மனைவியர் தம்முள் கோசலைப்
பெயரிய பெருந்தவப் பெண்கொடி வயிற்றில்
௨௫ அவதரித் தருளி யாண்டும் இணையிலாத்
தவமுடைத் தம்பியர் மூவரைப் பெற்று,
நலமுழு தார்ந்த நன்மலர்க் கொம்பை
புலநிறை மிதிலைப் பொன்னகர் மன்னன்
அருந்தவக் கொழுந்தை அனநடை மாதைக்
௩௦ கரும்பினைப் பாகைக் கட்டியைக் கனியை
கிளியைப் பழித்த கேடிலா மொழியை
அளிமீன் வேல்மான் ஆர்ந்த கண்ணியைத்
திலகத் திங்கள் திருநுதல் அமுதை
இலையென் றுரைக்கும் இடைச்சிறு மானைச்
௩௫ சிந்துரப் பவளச் செய்யவா யாளைச்
சிந்தைபொத் தக்கடன் செயுமிளை யாளை
ஆய்மயில் தன்னை அணங்கினை அணியைக்
காய்கனி நிறைந்த கானகக் குயிலைச்
சீதையென் பெயரிய செழுமலர்த் திருவைக்
௪௦ காதலித் துயர்ந்த கனவில் லொடித்து,
மணம்புணர்ந் தயோத்தி மாநகர் வந்து,
துணையொடு வாழ்நாள் திருமுடி சூடக்
கொற்றவன் குறித்தமை நீக்கிடக் கருதிய
சிற்றவை கூற்றைச் சிரமேல் தாங்கி,
௪௫ மற்றவள் பெற்ற மாமணி யனையான்
குற்றமொன் றற்றான் கோமுடி சூட

முன்னவன் இராமனே முழுமையும் உரியான்!
மன்னவன் அவனென மனமதிற் கொண்டான்!
தன்னுயிர் அனையதன் தமயனைப் பிரிந்தே
௫௦ இன்பெதும் நுகரான்! இராசபோ கத்தை
முற்றிலும் வெறுத்து முடிச்சடை தாங்கி
நற்றவம் புரிந்த நானிலத் திடிலாத்
தம்பி பாதனே தன்னுடை உரிமை
அம்புவி முழுமையும் ஆளுமா றளித்து,
௫௫ பிரிவினுஞ் சுடுமோ பெருங்கா டெனச்சொலி
விரைவில் எழுந்து மென்திரு மேனியில்
மாவுரி தரித்து வந்தநற் றுணையொடும்
அருககலா ததன் அரும்பிறப் பான
இளையோன் என்னும் இலக்குவன் தன்னொடும்
௬௦ உளைதல் தாயுற ஒருவன் வான்புக
வெங்கான் அடைந்து, வேடனைக் குரங்கை
மங்கையைப் பிரித்த வஞ்சகன் பின்வரும்
அரக்கன் ஒருவனை அகனமர் காதலின்
பெருக்கால் ஆண்டு, பிறப்பினில் வேற்றுமை
௬௫ சிறிதுங் கொளாது, சீதையென் அணங்கை
உறுதுயர் ஓரா தொருதலைக் காமப்
பித்துக் கொண்டு பேதித் தெடுத்துக்
கொத்துக் குழலாள் கத்தக் கத்தத்
தன்னகர் கொடுபோய்த் தருவார் சோலையில்
௭௦ புன்சிறை வைத்த போதகம் அன்னான்!
அருநிலம் முழுதும் வென்றபேர் ஆற்றல்
பெருவரை யனையான்! போறம் அறிபான்!

இலங்கையை ஆண்ட இராவணன் தன்னை
நலங்கெட வீழ்த்தி, நல்லுயிர் குடித்து,
௭௫ தந்திரம் வலிமை சார்ந்த அவன்மகன்
இந்திர சித்தனை இரண்டுதுண் டாக்கி,
கிளையெலாம் மடித்துக் கேடிலாக் கிளியை
உளைவெலாம் ஒருரு வெடுத்ததை ஒத்துக்
கொடியவன் சிறைக்குள் குமுறிய குயிலை
௮௦ நெடியவன் இராமன் நேயனை யன்றி
ஆவிவே றில்லா அருங்கடல் அமுதை
ஓவியத் தெழுத ஒண்ணு உருவைப்
பூண்புகழ் பொறுத்த புண்ணிய மூர்த்தியைக்
காண்தவக் காதலால் உயிர்பிடித் திருந்த
௮௫ தேவியை ஆவியைச் சீதையைத் திருவைப்
பாவியின் சிறைமீட்டு, அரியதம் பதிபோய்
மாகத மலையோர் மயிலுடன் பொலிந்து
விரவிய தென்ன மேவிய துணையோ
டரியணை அமர்ந்தே அரும்புவி போற்றத்
௯௦ திருமுடி சூடிய சீர்த்திசால் இராமன்,
பெருங்கதை தன்னைப் பேசிய புலவோர்
இரும்புவி தன்னில் எத்துணை யோபலர்!
பற்பல மொழியிற் பகன்ற பண்புடை
நற்பெரும் புலமை நாவலர் திறனெலாம்
௯௫ ஒருங்குடன் கவர்ந்தே ஒப்புயர் வின்றி
அருங்கவி புனைந்தோன்! அருமருந் தன்ன
உயர்பெருங் கோள்கை உறுமிடம் அறிந்து
தயரதன் மைந்தன் கதையினுள் சமைத்தோன்!

போதமார் சீர்த்திப் பொருவிலாக் கம்பன்
௧௦௦ சாதியென் பதுசிறு நெறியெனச் சாற்றினன்.
பூமகள் உயிரெனப் பொலிந்திடு தமிழ்த்தாய்
நாமகள் மணிமுடி ஆகிய நற்றாய்
தாமரை யாளுறை தமிழகச் சீர்த்தாய்
மாமணி யானதன் மக்களில் சான்ற
௧௦௫ புலமைமிக் குயர்ந்த பொருவறு சீர்த்திக்
கல்வல பெரியதம் காதலர் பல்லோர்
நாவினாற் றொடுத்த நன்மண மாலைப்
பாவினை ரங்கொள் பண்ணார் தமிழ்த்தாய்
அணிமணி வயிற்றில் அவதரித் தருளிப்
௧௧௦ பணியே கடனெனக் கொண்டிடு பாங்கினர்
பல்லோர் பகர்ந்தனர் பிறப்பினில் சாதி
இல்லை யெனவே ஏலுமா றெடுத்து.
சக்தியைச் சுமந்த சைவக் கடவுளைப்
பக்திச் சுவைநனி சொட்டப் பாடிய
௧௧௫ சேக்கிழான் என்னும் சீர்த்திசால் புலவன்
ஆக்கிய தொண்டர் அரும்புரா ணத்துள்
இறைவன் அடியார் யாரும் ஒன்றெனக்
குறைவறக் கொண்டனன்; நிறைவறி யாதார்
கூறிடு சாதி கொண்டு தொண்டரை
௧௨௦ வேறு படுத்திலன்; வேறு வேறாப்
பலப்பல வகுப்பில் தோன்றிய பலரையும்
நலத்தொடு பாடினன் நல்லோன் பெரிதும்;
பொதுவகை யாவவன் புகன்றது நிற்க,
வதுவையும் உணவுமே வகுப்புப் பிரிவில்

௧௨௫ தலைசிறந் துலகில் தாண்டவ மாடும்
நிலைகொல என்றே நெஞ்சம் நினைந்துகொல்!
அருமையில் அன்னான் ஆக்கிய தொண்டர்
பெரிய புராணம் என்னும் பெயரிய
உறுதிக் குயிர்விட ஒருப்படு பல்லோர்
௧௩௦ நிறைகதை நூலுள் நேத்திரம் அன்ன
சான்றோர் இருவர் தனிக்கதை தன்னுள்
வான்றோய் புகழுடை வதுவையும் உணவும்
பிறப்பினாற் கொள்ளும் பேதைமை நீக்கி
அறப்பெருங் கொள்கையை அறுதி யிட்டனன்;
௧௩௫ தேவா ரந்தரு சிவமதத் தலைவர்
மூவருள் இருவர் மொய்புகழ் ஆளர்
ஒருவனு வரையன் ஒருவன் சுந்தரன்
இருவருள் முன்னோன் எண்பத் தோரான்
டிப்புவி வாழ்ந்துஇவ் இருநிலம் போற்ற
௧௪௦ ஒப்புயர் வின்றி ஒழுக்கங் காத்து
நாமார்க் குங்குடி யல்லோம்! நண்ணோம்!
கோமாற் குரையும் கூற்றும் அஞ்சோம்!
பாராள் வேந்தர் பணிகொள மாட்டோம்!
சீரார்க் கஞ்சும் செயலெதும் இல்லை!
௧௪௫ செப்புமின் நம்மிறைக் கெனச்சொலிச் செலுத் [திய
அப்பனென் றுரைகெழு மவ்வே ளாளன்
அப்பூ தியெனும் அந்தணன் அகத்தில்
ஒப்புடன் இல்லாள் ஊட்டிய அமுதை
மைந்தரின் நடுவில் மறையோன் மருங்கில்
௧௫௦ பந்தியில் அமர்ந்து பாங்குடன் உண்டான்!

எனஅழ கொழுக இருங்கலப் புணவை
மனமது குளிர வழுத்தினன் ; நிற்க
மிடுக்குடன் இறையின் மெய்ப்புகழ் பாடும்
துடுக்குடைத் தம்பிரான் தோழன் சுந்தரன்
[illegible]௫ இருபெரும் மயிலை ஏற்றனன் திருமணம்
மருமலர்க் குழலுடை மாதரார் இருவரும்
சாதியில் அயலார்! தானோ மறையோன்!
காதலி இருவருள் கணிகையர் குலத்தில்
தோன்றினள் ஒருத்தி! மற்றொரு சுந்தரி
[illegible]௦ ஆன்றவே வேளாளர் அருங்குலம் வந்தாள்!
கற்பகக் கொம்பைக் காமனின் வாழ்வைப்
பொற்புடைப் புண்ணியப் புயற்குழ லாளை
விற்புரை பவளவாய் விரைமலர்க் கொடியை
அற்புதப் பாவையை அகங்கா தலித்துத்
[illegible]௫ திருமணம் புணர்ந்து, சின்னாள் சென்றபின்
ஒருபகல் ஆலயத் துற்றகட் டழகார்
கோவா முத்தும் கூடும் சுரும்பார்
மேவாக் கொழுநகை மென்முகை யும்பொரு
யாழிசை மொழியாள் இருகுழை பிறழும்
[illegible]௦ மாழைநல் விழியாள் வனப்புடைச் சங்கிலி
தனைமணங் கண்டு, தையலார் கண்ணே
மனமகிழ் ஐம்புல வகையுடை இன்பம்
ஒருங்குண் டென்ன உலகுய அறம்புகல்
பெருங்கவி இன்பிற் பேசிய வாறு
[illegible]௫ கண்டும் கேட்டும் கட்டியும் உயிர்த்தும்
உண்டும் வாழ்ந்தான், உளனமர் காதல்

மாானேர் வனப்புடை ஆரூர் நம்பி!
ஆரம்சிவனுக் களித்த புகழோன்!
ஆதிசைவரெனும் அந்தணர் குலத்தின்
௧அ௦ சோதியா வந்து துலங்கிய அறிஞன்!
தம்பிரான் வலியத் தடுத்தாட் கொண்ட
நம்பன்! பரவை சங்கிலி நங்கையர்
ஆகிய தன்னுடை அருமைசால் காதலிப்
பாகினைப் பழிக்கும் பணிமொழி யாரை
௧அ௫ இறைவனைப் பாடும் ஏதமில் பாக்களில்
மறவா துரைக்கும் மாண்குணம் மிக்கோன்!
எனுங்கருத் தமைந்த எழிலுறு நிகழ்ச்சியை
வனைந்தனன் சேக்கிழான் மாபுரா ணத்துள்;
இவைகள் கிடக்க, இறையைப் பாடிய
௧௯௦ தவமுடை மூவரில் சம்பந் தனெனும்
இயற்கையைப் பாடும் எழிலார் புலவன்!
நயப்பமை பெரியோன் மறைக்குலம் நண்ணினோன்!
தனக்கெனத் தான்தவம் முயன்று பெற்ற
வனக்கிளி யனையபூம் பாவை மானை
௧௯௫ வளர்த்தனன் சிவநே சன்னெனும் வணிகனென்
றுளத்தினன் சேக்கிழான். உளருமிவ் உலகில்
சாதிகள் சமைத்தது சார்தொழி லானும்
பேதுறு குணங்களி னாலுமென் பேசினன்
போரினில் நாற்குப் புகன்ற கீதையில்
௨௦௦ காரியம் ஆர்ந்த கண்ணனென் றுரைப்ப.
பிறந்தமை கொண்டு மேல்கீழ் பேசல்
அறம்பொருள் காணு அறிவிலார் கொள்கை.

அந்தணர் என்போர் அறவோர் என்றே
செந்தமிழ்ப் புலவன் செப்பினன் பண்டு.
உ0ரு அந்தணர்க் குரிய அருங்கடன் ஆற்று
திந்தமா நிலத்தில் யாவரும் அந்தணர்
எனச்சொலித் திரிவார்! இதுபொருள் பெறுமோ?
இனப்பெரு மைசொலும் எவருமவ் வாறே!
தாய்வயி றுதித்த தொன்றைச் சார்ந்தே
உக0 ஆய்வறி வின்றி அறைகுவர் சாதி!
உயர்ந்தவர் செய்கடன் ஒன்றையும் அறியார்!
உயர்ந்தவர் தாங்களென் றுரைப்பார் வாயால்!
படிப்படி யாகச் சாதிகள் பகர்ந்து
கெடுத்தனர் கீழோர் கேடிலா நாட்டை!
உகரு நானுயர் நற்குலன்! நீகீழ்ச் சாதி!
நானெது செயினும் நற்குலம் தாழேன்!
கேட்டார் வெறுக்கும் கீழ்த்தொழில் செயினும்
வாட்டமொன் றில்லை! வகுப்பு வகுப்பே!
என்றறி வின்றி இந்நிலத் தொருசார்
உஉ0 மன்றினில் ஏறியும் வழுத்துதல் வியப்பே!
தக்கவை அறியாத் தகைவிலா ஒருகுழு
மக்கட் பிறவி வாய்த்தவர் தம்முள்
தீண்டா தாரெனச் சிலரைத் தள்ளலும்
காண்டலும் தீதெனச் சிலரைக் கழறலும்
உஉரு அறிவோ! அறமோ! ஆற்றலோ! அழகோ!
இறைகோ வில்லுள் ஏகலும் ஆகாது
ஊர்ப்பொதுக் கேணி ஊருணி வீதி
சார்ந்திடல் ஆகா தவரெனத் தடுத்தல்

மெய்யறி விழந்த வீண்செயல் அன்றோ !
உ௩௦ செய்தொழில் இழிவெனச் செப்புதல் உண்டேல்
தீண்டா தாரெனச் செப்பு குலத்தில்
மாண்குணம் மிக்க மக்களும் உள்ளார் !
பிறப்பினில் உயர்வெனப் பேசு குலத்தில்
மறத்தொழி லேசெய் மதியிலார் உள்ளார் !
உ௩௫ புலைத்தொழில் செய்வோர் புலையரென் றிசைத்தால்
புலைத்தொழி லேசெய் புல்லோர் பல்லோர்
எல்லாக் குலத்தினும் இருப்பதை மறைத்தல்
ஒல்லா தாகலான் உறுதொழில் கருதிச்
செயல்நனி நாடிச் செய்கடன் ஆற்றின்
உச௦ உயர்ந்தோர்க் கொள்ளலும் ஒழிந்தோர்த் தள்ளலும்
வேண்டுமப் பேச்சு வீண்பேச் சன்றோ !
தீண்டல் தகாதெனச் சிறிதும் ஓராது
வீணே மொழிதல் விந்தையுள் விந்தை !
காணும் கடல்சூழ் காசினி தன்னில்
உச௫ ஆதியில் வகுப்பிலை! ஆர்தொழில் கொண்டு
சாதி வகுத்தனர் சார்சிலர் இடையில் !
பின்பு தொழிலெலாம் பிறழ்ந்தது! அஃதியற்கை!
இன்றதைக் கொண்டே இடர்ப்பட் டுழலாது
உறுமணம் உணவெலாம் வகுப்புரைத் தொழியா
உ௫௦ அறந்தலை நிற்றல் அறிஞரின் கடனே.



# 10. வீர நாடு

---

பாடிய தேதி:—ஆங்கிரச ஐப்பசி கரு-வ்

## காவடிச் சிந்து

பூமகள் மாமுடி யாகமுன் னாளில்
பொலிந்த வளநாடு—புகழ்
நாமகள் நன்னடம் ஆடக் கலைசெறி
நம்தவ நன்னாடு. க

நினைப்பதற் குமெட்டா நீணெடு நாள்முனர்
நிகரொன் றிலாதவளர்—புவி
அனைத்தும் வியந்திட வீரம் உலகுக்கு
அளித்த வளநாடு. உ

மக்களுக் காகவே மன்னவர் வாழ்வென
மனமதிற் கொண்டபுகழ்ப்—பெரு
மன்னவர் பற்பலர் ஆண்டிட வாய்ந்தது
மாண்புடை நம்நாடு. ௩

வாட்டடங் கண்ணியர் இன்பம் துறந்துதம்
வாழ்வுமண் தந்தைக்கா—விட்ட
வீட்டுமன் என்றபேர் வீரம் செறிதவ
மேலவன் சீர்நாடு. ௪

சிறுமை பலப்பல செய்த சிறியவர்
தீமைபன் ளுட்பொறுத்த—நிறை
பொறுமை யுடைய தரும னெனும்புகழ்ப்
புண்ணியன் பொன்னுடு. ரு

தொட்டுத் துரோபதை மாதைத் துகிலுரி
துச்சா தனக்கொடியோன்—உடல்
பட்டிடச் செய்துசெங் நீர்குடிப் பேனெனும்
பார்த்திபன் வாழ்நாடு. சு

காதலி பேரெழில் கண்டவ ளைப்பெறக்
கடமைச் செயல்களெலாம்—செய்த
பாதகர் தங்களை மோதி அழித்தநற்
பற்குனன் வாழ்நாடு. எ

தொடையில் இருத்திடச் சொன்ன சுயோதனன்
துண்டு படுங்களத்தே—அவன்
உடலுகு நீர்கொடு குழல்முடிப் பேனெனும்
ஒருமறப் பெண்ணுடு. அ

வஞ்சனை செய்துதன் தேவி தனைச்சிறை
வைத்த இராவணனை—ஒரு
தஞ்ச மறமடித் திட்ட தயாதன்
தன்மகன் சீர்நாடு. கூ

தாயுரை கொண்டுதந் தைதரு தாரணி
தன்னை வெறுத்துமுன்னேன்—தனை
மேயவன் நல்லடி மாமுடி சூடிய
மேற்பா தன்னுடு. க0

சோரனுக் குத்துணை செய்த வவன்மகன்
தொல்லிந் திரசித்தன்—எனும்
வீரன் தலைதரை வீழ்த்தும் இளையவன்
வீரம் செறிநாடு. கக

தன்னொரு மைந்தனின் மார்பத னிற்றேர்
தான்விடுத் தேமடித்த—நீதி
மன்னவன் மாமுறை கண்ட மநுவெனும்
மாண்புடை யானாடு. கஉ

பெற்ற மகனுயிர் விட்ட களம்போய்ப்
பிணக்குவை தான்புரட்டி—மகன்
இற்ற உயர்ச்சிகண் டின்றதி னும்மகிழ்
ஏந்திழை யாணாடு. கங

தன்கண வன்தவ றில்லா தவனெனச்
சபையில் வழக்குரைத்துத்—தமிழ்
மன்னவ னைப்பழி வாங்கிய கண்ணகி
மங்கை பெருநாடு. கச

குற்றமில் கோவலன் தன்னைக் கொலைசெய்
கொடுமை உணர்ந்தவுடன்—உயிர்
சற்றுந் தயங்கா தழித்த பெரும்புகழ்த்
தமிழ்க்கோன் அருநாடு. கரு

புறவின் பொருட்டுத் தசையரிந் திட்ட
புகழுடை மன்னவனும்—சிபி
அறமுடைத் தன்மையன் ஆண்ட சிறப்புடை
அணிப்பா ரதநாடு. கசு

காதல் யசோதரை இன்பக் கடலைக்
கடந்து பெருந்திருவை—விட்டுப்
போதி யிருந்தறம் ஓதிய நாதனெம்
புத்தன் தவநாடு. ௧௭

பிறப்புரி மைசுய ஆட்சி யெனுமறை
பேசிய பேரறிஞன்—உயர்
சிறப்புடைப் பாலகங் காதரன் என்றவெம்
திலகனின் தாய்நாடு. ௧௮

அன்றுமின் றுமென்றும் அவனி தனிலிணை
அருமை எனஉயர்ந்த—அறம்
நன்றறி நாயகன் மோகன தாசனெம்
நற்றவன் வாழ்நாடு. ௧௯

எல்லையில் குண்டுகள் இல்லாப் பழையநாள்
எவரும் நடுங்கிடவே—போரில்
வில்லில் சரந்தொடுத் துலகு கலக்கிய
வீரர் மலிநாடு. ௨0



# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.



| தொடர் எண். | பாட்டு. | பதிகம். | பக்க எண். |
|---|---|---|---|
| ௧ | அகமும் புறமும் | தமிழ்மொழி | ௧௪ |
| ௨ | அங்கமெலாம் | கோவில் திறவு | ௨௯ |
| ௩ | அச்சமென்ப | பேரிகை | ௭ |
| ௪ | அடிமைவாழ்வு | பேரிகை | ௬ |
| ௫ | அந்தணரென் | தமிழ்மொழி | ௧௫ |
| ௬ | அந்திநில | கிளி விடுதூது | ௨௭ |
| ௭ | அமிழ்தும் | காதல் மறுமணம் | ௨௪ |
| ௮ | அரியஉல | எந்நாட் கண்ணி | ௫ |
| ௯ | அருளையறத்தை | தமிழ்மொழி | ௧௫ |
| ௧௦ | அலகிலா | எந்நாட் கண்ணி | ௩ |
| ௧௧ | அறந்தழைக்க | பேரிகை | ௮ |
| ௧௨ | அன்பு கடவுள் | தமிழ்மொழி | ௧௮ |
| ௧௩ | அன்பு சிவம் | கோவில் திறவு | ௩௦ |
| ௧௪ | அன்பு மறத்தை | தமிழ்மொழி | ௧௫ |
| ௧௫ | அன்று புத்தன் | இந்தியா | ௧௨ |
| ௧௬ | அன்றுமின்றும் | வீரநாடு | ௪௬ |
| ௧௭ | அன்றென் | கிளி விடுதூது | ௨௭ |
| ௧௮ | ஆணுயர்வு | எந்நாட் கண்ணி | ௪ |
| ௧௯ | ஆத்திசூடும் | தமிழ்மொழி | ௧௮ |
| ௨௦ | ஆயிரம்பல் | தமிழ்மொழி | ௧௩ |
| ௨௧ | ஆயுமறிவி | தமிழ்மொழி | ௨௦ |
| ௨௨ | ஆழிகிடக்கு | எந்நாட் கண்ணி | ௨ |
| ௨௩ | இத்தரைக்கு | தமிழ்மொழி | ௧௪ |
| ௨௪ | இத்தரையில் | எந்நாட் கண்ணி | ௪ |
| ௨௫ | இந்தியாவை | விடுதலை | ௧௦ |
| ௨௬ | இருவர் இணைந்து | எந்நாட் கண்ணி | ௪ |

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.


| தொடர் எண். | பாட்டு. | பதிகம். | பக்க எண். |
|---|---|---|---|
| ௨௭ | இளமையும் | கிளி விடு தூது | ௨௭ |
| ௨௮ | இறை சிவனென் | தமிழ்மொழி | ௧௯ |
| ௨௯ | இனிமை நீர்மை | தமிழ்மொழி | ௧௫ |
| ௩0 | இன்னும் வரக் | காதல் மறுமணம் | ௨௪ |
| ௩௧ | உணர்ச்சிதன்னை | விடுதலை | ௧௧ |
| ௩௨ | உம்பர் | எந்நாட் கண்ணி | ௪ |
| ௩௩ | உயர்வு | பேரிகை | ௮ |
| ௩௪ | உயிரினும் | இந்தியா | ௧௨ |
| ௩௫ | உரிமை | பேரிகை | ௭ |
| ௩௬ | உருகியுருகி | தமிழ்மொழி | ௨0 |
| ௩௭ | உலகந்தன்னை | இந்தியா | ௧௨ |
| ௩௮ | உலகமெலாம் | கோவில் திறவு | ௩௧ |
| ௩௯ | உலகம் செழித் | எந்நாட் கண்ணி | ௩ |
| ௪0 | உலகினர் | சாதி | ௩௩ |
| ௪௧ | உளமிருக்கும் | தமிழ்மொழி | ௨0 |
| ௪௨ | எக்குலத்தில் | எந்நாட் கண்ணி | ௩ |
| ௪௩ | எங்கள் உரிமை | விடுதலை | ௧0 |
| ௪௪ | எங்கள் நாட்டின் | விடுதலை | ௧0 |
| ௪௫ | எங்கள் நாட்டை | விடுதலை | ௧௧ |
| ௪௬ | எங்கள் நாட்டை | விடுதலை | ௧0 |
| ௪௭ | எங்கள் நாட்டை | பேரிகை | ௬ |
| ௪௮ | எங்கும் நிறை | கோவில் திறவு | ௨௯ |
| ௪௯ | எடுக்கும் பிறவி | கிளி விடு தூது | ௨௬ |
| ௫0 | எந்திர பீ | பேரிகை | ௭ |
| ௫௧ | எந்திர பீ | விடுதலை | ௧௧ |
| ௫௨ | எல்லையில் | வீர நாடு | ௪௬ |
| ௫௩ | எனக்குத் தமிழ் | எந்நாட் கண்ணி | ௨ |
| ௫௪ | என்றைக்கேனும் | பேரிகை | ௭ |

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.


| தொடர் எண். | பாட்டு. | பதிகம். | பக்க எண். |
|---|---|---|---|
| ௫௫ | என்னகம் தொட்ட | காதல் மறுமணம் | ௨௨ |
| ௫௬ | என்னலம்நாடி | கிளி விடுதூது | ௨௮ |
| ௫௭ | ஏலநீதி | தமிழ்மொழி | ௧௪ |
| ௫௮ | ஏழை இல்லை | பேரிகை | ௬ |
| ௫௯ | ஒக்கும் பிறப்பில் | தமிழ்மொழி | ௧௫ |
| ௬௦ | ஒன்றறியா | எந்நாட் கண்ணி | ௨ |
| ௬௧ | ஓதத் திரைக்கடல் | காதல் மறுமணம் | ௨௪ |
| ௬௨ | கடமை | எந்நாட் கண்ணி | ௪ |
| ௬௩ | கட்டழகி | கிளி விடுதூது | ௨௬ |
| ௬௪ | கண்டார் மருள | எந்நாட் கண்ணி | ௪ |
| ௬௫ | கண்ணகி கோ | தமிழ்மொழி | ௧௭ |
| ௬௬ | கத்தர் பெருக | பேரிகை | ௮ |
| ௬௭ | கரும்பும் தேனும் | தமிழ்மொழி | ௨௧ |
| ௬௮ | கரைபொருந்த | தமிழ்மொழி | ௧௪ |
| ௬௯ | கலை வளர்த்தே | இந்தியா | ௧௨ |
| ௭௦ | கல்லும் மானும் | தமிழ்மொழி | ௧௮ |
| ௭௧ | கன்னற்சாறும் | தமிழ்மொழி | ௧௯ |
| ௭௨ | காதலி | வீர நாடு | ௪௪ |
| ௭௩ | காதல் புரி | எந்நாட் கண்ணி | ௨ |
| ௭௪ | காதல் யசோ | வீர நாடு | ௪௬ |
| ௭௫ | காதல் வீரம் | இந்தியா | ௧௨ |
| ௭௬ | காந்திமேல் | காதல் மறுமணம் | ௨௨ |
| ௭௭ | காந்தியின் | கிளி விடுதூது | ௨௮ |
| ௭௮ | காந்தி வந் | பேரிகை | ௭ |
| ௭௯ | கிள்ளை மொழி | கோவில் திறவு | ௫௩ |
| ௮௦ | குதலைச் சிறு | எந்நாட் கண்ணி | ௨. |
| ௮௧ | குழலும் யாழும் | தமிழ்மொழி | ௧௭ |
| ௮௨ | குற்றமில் | வீர நாடு | ௪௫ |

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.


| தொடர் எண். | பாட்டு. | பதிகம். | பக்க எண். |
|---|---|---|---|
| ௮௩ | கொடுமையான | பேரிகை | ௭ |
| ௮௪ | கொட்டுகொட்டு | பேரிகை | ௯ |
| ௮௫ | கொண்டல்வணன் | கோவில் திறவு | ௩0 |
| ௮௬ | கொத்தடிமை | எந்நாட் கண்ணி | ௩ |
| ௮௭ | கோடிபடைத் | எந்நாட் கண்ணி | ௨ |
| ௮௮ | சரிநிகராய் | எந்நாட் கண்ணி | ௧ |
| ௮௯ | சாதி சிறிய | தமிழ்மொழி | ௧௬ |
| ௯0 | சாதியால் | எந்நாட் கண்ணி | ௨ |
| ௯௧ | சாலிவா | எந்நாட் கண்ணி | ௧ |
| ௯௨ | சிறுமை | வீர நாடு | ௪௪ |
| ௯௩ | சின்னஞ் சிறு | எந்நாட் கண்ணி | ௪ |
| ௯௪ | சீர்திருத்தம் | தமிழ்மொழி | ௨0 |
| ௯௫ | செந்தமிழ்த் | காதல் மறுமணம் | ௨௫ |
| ௯௬ | செல்லுமிட | எந்நாட் கண்ணி | ௫ |
| ௯௭ | செவியில் தேனை | தமிழ்மொழி | ௧௬ |
| ௯௮ | சொல்லில் தேனும் | தமிழ்மொழி | ௧௭ |
| ௯௯ | சோரனுக்கு | வீர நாடு | ௪௫ |
| ௧00 | சோலையிடை | கிளி விடுதூது | ௨௮ |
| ௧0௧ | தகவறியா | எந்நாட் கண்ணி | ௧ |
| ௧0௨ | தன் கணவன் | வீர நாடு | ௪௫ |
| ௧0௩ | தன்னொரு | வீர நாடு | ௪௫ |
| ௧0௪ | தாயுரை | வீர நாடு | ௪௪ |
| ௧0௫ | தாய்விலங்கு | விடுதலை | ௧௧ |
| ௧0௬ | திசை குலுங்க | பேரிகை | ௬ |
| ௧0௭ | திறமுணர்ந்து | தமிழ்மொழி | ௧௮ |
| ௧0௮ | துறவுமணி | தமிழ்மொழி | ௧௭ |
| ௧0௯ | துன்பம் செய்வோர் | பேரிகை | ௯ |
| ௧௧0 | தூண்டும் அறி | எந்நாட் கண்ணி | ௩ |

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.


| தொடர் எண். | பாட்டு. | பதிகம். | பக்க எண். |
|---|---|---|---|
| ௧௧௧ | தூய கதருடுத்தி | காதல் மறுமணம் | ௨௩ |
| ௧௧௨ | தெய்வ மணக்க | தமிழ்மொழி | ௧௯ |
| ௧௧௩ | தேமாங்கனி | எந்நாட் கண்ணி | ௩ |
| ௧௧௪ | தேவர் குறள் | எந்நாட் கண்ணி | ௪ |
| ௧௧௫ | தேவைப் பாடும் | தமிழ்மொழி | ௧௮ |
| ௧௧௬ | தேவை மாலை | தமிழ்மொழி | ௧௮ |
| ௧௧௭ | தொடையில் | வீர நாடு | ௪௪ |
| ௧௧௮ | தொட்டுத் | வீர நாடு | ௪௪ |
| ௧௧௯ | தொழில் வளர | பேரிகை | ௯ |
| ௧௨௦ | தொன்றுதொட்டு | இந்தியா | ௧௨ |
| ௧௨௧ | நந்தனை | கோவில் திறவு | ௩௨ |
| ௧௨௨ | நலத்துடனே | எந்நாட் கண்ணி | ௫ |
| ௧௨௩ | நலமனைத்தும் | தமிழ்மொழி | ௧௫ |
| ௧௨௪ | நல்ல தமிழில் | தமிழ்மொழி | ௨௧ |
| ௧௨௫ | நல்ல பொரு | எந்நாட் கண்ணி | ௫ |
| ௧௨௬ | நனியிப் பூவில் | தமிழ்மொழி | ௧௬ |
| ௧௨௭ | நாகரிகம் | இந்தியா | ௧௨ |
| ௧௨௮ | நாடு புகழும் | தமிழ்மொழி | ௧௬ |
| ௧௨௯ | நாட்டை மறந்து | எந்நாட் கண்ணி | ௧ |
| ௧௩௦ | நிலையில் | எந்நாட் கண்ணி | ௫ |
| ௧௩௧ | நினைப்பதற் | வீர நாடு | ௪௩ |
| ௧௩௨ | நீலக்கடல் | கிளி விடுதூது | ௨௭ |
| ௧௩௩ | நுண் மணல் | எந்நாட் கண்ணி | ௫ |
| ௧௩௪ | பச்சிளங்கன்னி | காதல் மறுமணம் | ௨௩ |
| ௧௩௫ | பட்டம்பதவி | பேரிகை | ௮ |
| ௧௩௬ | பண்டைநாளில் | தமிழ்மொழி | ௧௩ |
| ௧௩௭ | பாரவு தமிழில் | தமிழ்மொழி | ௨௦ |
| ௧௩௮ | பல்லோரும் | எந்நாட் கண்ணி | ௩ |

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.


| தொடர் எண். | பாட்டு. | பதிகம். | பக்க எண். |
|---|---|---|---|
| கஙகூ | பழய வழக்க | எந்நாட் கண்ணி | உ. |
| கச0 | பித்துக்கொண் | எந்நாட் கண்ணி | உ |
| கசக | பிறந்தபொழுதே | விடுதலை | க0 |
| கசஉ | பிறந்தார் | எந்நாட் கண்ணி | ங |
| கசங | பிறப்பதனுல் | கோவில் திறவு | ஙஉ |
| கசச | பிறப்பில் | எந்நாட் கண்ணி | ச |
| கசரு | பிறப்புரி | வீர நாடு | சசு |
| கசசு | பிறர்க்குரியார் | எந்நாட் கண்ணி | ச |
| கசஎ | புதுமைகொண்ட | தமிழ்மொழி | கசு |
| கசஅ | புத்தனருள் | தமிழ்மொழி | கஎ |
| கசகூ | புலமைதன்னில் | தமிழ்மொழி | கச |
| கரு0 | புலேமைத் தொழில் | எந்நாட் கண்ணி | உ |
| கருக | புலேயரொன்று | பேரிகை | அ |
| கருஉ | புறவின் | வீர நாடு | சரு |
| கருங | புனிதமறியாது | எந்நாட் கண்ணி | உ |
| கருச | பூதான் அளப் | எந்நாட் கண்ணி | ங |
| கருரு | பூமகன் | வீர நாடு | சங |
| கருசு | பெண்ணே யிழிப் | பேரிகை | அ |
| கருஎ | பெரிதும் வளரும் | தமிழ்மொழி | கரு |
| கருஅ | பெரியமாலே | தமிழ்மொழி | கக |
| கருகூ | பெற்ற மகன் | வீர நாடு | சரு |
| கசு0 | மக்களுக் | வீர நாடு | சங |
| கசுக | மண் குளிர | எந்நாட் கண்ணி | க |
| கசுஉ | மண்ணிலெங் | தமிழ்மொழி | கங |
| கசுங | மதியினர்கள் | தமிழ்மொழி | உ0 |
| கசுச | மருவுகளவும் | தமிழ்மொழி | கச |
| கசுரு | மாதடிமை | எந்நாட்கண்ணி | ரு |
| கசுசு | மாலின்பாதத் | தமிழ்மொழி | [illegible]கூ |

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.


| தொடர் எண். | பாட்டு. | பதிகம் | பக்க எண். |
| --- | --- | --- | --- |
| கசுஎ | மாழைக் கரு | காதல் மறுமணம் | உரு |
| கசுஅ | முடிசூடி | எந்நாட் கண்ணி | ௩ |
| கசுகூ | மூக்கடைக்க | எந்நாட் கண்ணி | ச |
| கஎ௦ | மூல நூலை | தமிழ்மொழி | கசு |
| கஎக | மூவரன்று | தமிழ்மொழி | ககூ |
| கஎஉ | மேவு மின்பம் | தமிழ்மொழி | கஎ |
| கஎ௩ | மோதுபெரும் | கோவில் திறவு | ௩க |
| கஎச | யார்க்கும் நாங்கள் | தமிழ்மொழி | ககூ |
| கஎரு | வசையின்றி | எந்நாட் கண்ணி | ௩ |
| கஎசு | வஞ்சனை | வீர நாடு | சச |
| கஎஎ | வம்ப விழ்தா | கோவில் திறவு | ௩௦ |
| கஎஅ | வழி காட்டுவோம் | கிளி விடுதூது | உஎ |
| கஎகூ | வள்ளுவனென் | இந்தியா | கஉ |
| கஅ௦ | வன்சிறைக்கு | விடுதலை | கக |
| கஅக | வாட்டடங் | வீர நாடு | ச௩ |
| கஅஉ | வாய்த்த | எந்நாட் கண்ணி | க |
| கஅ௩ | வாராதொழி | காதல் மறுமணம் | உ௩ |
| கஅச | வானமீன் | இந்தியா | கஉ |
| கஅரு | விடுதலைக்கு | பேரிகை | கூ |
| கஅசு | விலைமதிப்பில் | இந்தியா | கஉ |
| கஅஎ | வீயாப் புக | எந்நாட் கண்ணி | க |
| கஅஅ | வீரங்காதல் | தமிழ்மொழி | உக |
| கஅகூ | வீறேடா | எந்நாட் கண்ணி | உ |
| ககூ௦ | வேந்தன் | எந்நாட் கண்ணி | ச |
| ககூக | வைத்தபெரு | எந்நாட் கண்ணி | ௩ |

